(2) பூவென்ற பாதம் வருடி வருடிப்
புளக முலையை நெருடி நெருடி
யேவென்ற கண்ணுக்கோ ரஞ்சனந் தீட்டி
யெடுத்த சுருளு மிதழால் இடுக்குவள்
வாவென்று கைச்சுருள் தாவென்று வாங்காள்
மனக்குறி கண்டு நகக்குறி வைத்தபின்
ஆவென் றுருக்கா லிருக்கா லுதைப்பள்
அதுக்குக் கிடந்து கொதிக்குதென் பேய்மனம் (சிங்கி)

(3) தாராடுங்குன்றி வடத்தை யொதுக்கித்
தடமார் பிறுகத் தழுவவந் தாலவள்
வாராடுங் கொங்கைக்குச் சந்தனம் பூசாள்
மறுத்துநான் பூசினும் பூசலாகா தென்பாள்
சீராடிக் கூடி விளையாடி யிப்படித்
தீரா மயல்தந்த தீராமைக் காரியைக்
காராடுங் கண்டர்தென் னாரிய நாட்டுறை
காரியப் பூவையை யாரியப்பாவையை (சிங்கி) (104)

## நூவன் சிங்கியினது அடையாளம் வினவுதல்.

கொச்சகக்கலிப்பா

சங்கமெலா முத்தீனுஞ் சங்கர்திரி கூடவெற்பிற்
பொங்கமெலாஞ் செய்யுமுங்கள போகமெலா மாரறிவார்
சிங்கமெலா மொத்ததுடிச் சிங்காஎன் சிங்கிதனக்
கங்கமெலாஞ் சொல்லி யடையாளஞ் சொல்வாயே (105)

---

(2) வருடிவருடி-தடவித்தடவி. புளகம் - இங்கிதமுடைய. நெருடி நெருடி-உறுத்தித்தடவித்தடவி. ஏ-பாணத்தை. அஞ்சனந்தீட்டி - மை பெய்தி . எடுத்த சுருளும்-கையிலெடுத்த வெற்றிலைச்சுருளையும். இதழால் இடுக்குவள்-உதடுகளால் இடுக்கிப்பிடிப்பள் மனக்குறி-மனத்தின்குறிப்பு. வைத்தபின்-பதித்தபின்னர் (தாற்பரியம்). ஆவென்று-பரவசப்பட்டு.

(3) தார் ஆடும்- பூமாலை போலசையும். குன்றிவடம்-குன்றிமணி மாலை. பூசல்-பூசுதல். (சண்டை). தீராமை-கொடுமை; இது: புகழ்ச்சியில் வந்தது. கார்-கருநிறம். ஆரியம்-அழகு.

(105) சங்கர் - சங்கக்கோயிலுடையார். பொங்கம் - பொலிவான விஷயம். போகம்-இன்பம். துடி-வேகத்தையுடைய. அங்கம்-அவயவம்.

## சிங்கன் சிங்கியினது அடையாளங் கூறுதல்.

இராகம்—பியாகடை. மிசுர தாளம்.

பல்லவி.

*கறுப்பிலழகியடா என்சிங்கி கறுப்பிலழகியடா*

அநுபல்லவி.

*கறுப்பிலழகி காமச் சுறுக்கில மிகுந்த சிங்கி சுகக்காரி (கறு)*

சரணங்கள்.

(1) *கண்க ளிரண்டுமம்புக் கணைபோல் நீண்டிருக்குங்*
*கையத் தனையகலங் காணுமடா*
*பெண்கள் மயக்குமவள் விரகப்பார்வை சிங்கி*
*பிடித்தால் மதப்பயலும பெலபபானே*

(2) *நகையு முகமுமவள் நாணயக் கைவீச்சும்*
*பகைவருந் திரும்பிப் பார்ப்பாரடா*
*தொகையாய்ச் சொன்னேனினிச் சொலலக்கூடாதொரு*
*வகையாய் வருகுதென்னை மயக்குதையே (கறு)*

(3) *விடையில வரும்பவனி யுடையார் திருக் குற்றாலர்*
*சடையி லிளமபிறைபோற் றனிநுதலாள்*
*நடையி லழகுமிரு துடையி லழகுமவ*
*ளுடையி லழகுமென்னை யுருக்குதையோ (கறு) (106)*

நூவன் சிங்கியைச்சேர்த்து வைப்பதற்குச் சிங்கனிடங்
கூலி வினவுதல்.

கொச்சகக்கலிப்பா.

*சாட்டிநிற்கு மண்டமெலாஞ் சாட்டையிலாப் பம்பரமபோ*
*லாட்டுவிக்குங் குற்றாலத் தணணலார நனறுட்டிற*

---

(106) சுறுக்கில்-விரைவில்; அல்லது கூர்மையில்.

(1) அம்புக்கணை-பாணமாகிய கணை. பெண்கள் - பெண்களையும், மயக்கும்-மயக்கச்செய்யும் பெலப்பானே - பலங்கொண்டு எதிர்த்து நிற்பானே.

(2) நாணயம் - ஒழுங்கு.

(3) தனி நுதலாள் - ஒப்பற்ற நெற்றியை யுடையவள்.

(107) சாட்டி - மோதப்பட்டு; நெருங்கி.

காட்டுவிக்கு முன்மோகக் கண்மாயச் சிங்கிதனைக்
கூட்டுவிக்கும் பேர்களுக்குக் கூலியென்ன சொல்வாயே (107)

## சிங்கன் நூவனுக்குப் பிரதியுபகாரங் கூறுதல்.

இராகம்-தர்பார், ரூபக தாளம்.

கண்ணிகள்.

(1) வாடை மருந்துப் பொடியும் அம்மியூர்
மரப்பாவை பின்றொடர மாயப்பொடியுங்
கூடியிருக்க மருந்தும இருபொழுதுங்
கூடியிருப பார்களைக் கலைக்க மருந்துங்
காடுகட்டக் கினிக்கட்டு குறளிவித்தை
கண்கட்டு வித்தைகளுங் காட்டித் தருவேன்
வேடிக்கைக் காமரதிபோல திரிகூட
வெற்பிலுறை சிங்கிதனைக் காட்டாயையே.

(2) மலையைக் கரையப் பண்ணுவேன குமரிகட்கு
வாராத முலைகளுமா வரப்பண்ணுவேன்
முலையை யொழிக்கப்பண்ணுவேன் ஒழித்தபேர்க்கு
மோகினி மந்திரஞ்சொலலி வரபபண்ணுவேன்
திலத வசீகரஞ் செய்வேன் ஒருவருக்குந்
தெரியாமற் போகவரச் சித்துமறிவேன்
கலகமத னப்பயலை யெனமேற் கண்
காட்டிவிட்ட சிங்கிதனைக் காட்டாயையே (108)

---

காட்டுவிக்கும் - காணச்செய்யும். உன்-உன்னுடைய.

(1) அம்மியூர் - அம்மிமேலேறி நடை செலுத்தும். மரப்பாவை- மரத்தாலாகிய பாவை. பின்றொடர - பின்னே தொடர்ந்துவர; இங்ஙனம் வரும்படி செய்தல் மந்திரவாதிகளது தொழிலிலொன்று. காடுகட்டு- காட்டினிடத்து மிருகமாவது பறவையாவது புகாமலிருக்கச்செய்தல். அக்கினிக்கட்டு-தீ சுடாமலிருக்கச்செய்தல். காட்டாய்-காட்டுவாய்.

(2) திலதவசீகரம் - அஃதாவது: ஒரு மைப்பொட்டு இட்டுச்சென்றால் வேண்டியவர்களை வசமாக்குதல். சித்து-மந்திரம். கண்காட்டிவிட்ட- ஏவிவிட்ட (தாற்பரியம்).

நூவன் சிங்கனைப் பரிகசித்தல்.

விருத்தம்.

ஆற்றை நான் கடத்திவிட்டால ஆகாசமார்க்க மோடத்
தேற்றநீ யறிவாய் கொல்லோ திரிகூட மலையிற்சிங்கா
சாற்றுமுன் மருந்துபோலச் சகலர்க்குங் குறிகள் சொல்லிப்
போற்றுமுன் சிங்கிபோன புதுதெரு விதுகண்டாயே (109)

சிங்கன் சிஙகியைக் காணாமல் வருந்துதல்.

இராகம்-முகாரி. ஆதி தாளம்.

பல்லவி.

எங்கேதான் போனளோயே யென்சிங்கி யிப்போ
தெங்கேதான் போனளோயே.

அநுபல்லவி.

கங்காளர் திரிகூடக் கர்த்தர்திரு நாடுதன்னில் (எங்கே)

சரணங்கள்.

(1) வேளா கிலுமயக்குவள் வலியத்தட்டிக்
கேளா மலுமு யக்குவள்
ஆளா யழகனுமா யாரையெஙகே கண்டாளோ
தோளாசைக காரிசிஙகி சுமமா கிடக்கமாட்டாள் (எங்)
(2) மெய்க்குறியா லெங்கும வெல்லுவள் மனக்குறியுங்
கைக்குறியுங் கணடு சொலலுவள்

---

(109) தேற்றம் - தெளிவான வித்தை (ஆகு பெயர்). மருந்து - மருந்தினருமை (ஆகுபெயர்). குறிகள்-(அருமையாகிய) குறிகள். போற்றும் - (தெய்வங்களைப்) பராவும்.

(110) கங்காளர் - முழுவெலும்பணிந்தவராகிய.

(1) வேள்-மன்மதன். மயக்குவள் - மயங்கச்செய்வள். தட்டி - அடித்தெழுப்பி. முயக்குவள் - புணரச்செய்வள், தோள்- (என்னுடைய) புயத்தில்.

(2) மெய்க்குறி - சரீரத்திற்றேன்றும் அடையாளம்.

திக்கிலடங் காதுகுறி யிக்கிலடங் காதுமொழி
மைக்குளடங் காதுவிழி கைக்குளடங் காதகள்ளி(எங்கே)

(3) சித்திரச பேசர்மேலே சிவசமயப்
பத்தியில்லாப் பேயர்போலே
குத்தியி லரக்குங்கள்ளுங் குடுவையிற் றென்னங்கள்ளும்
அத்தனையுங் குடித்துப்போட் டார்பிறகே தொடர்ந்
தாளோ (எங்கே) (110)

## சிங்கன் சிங்கியைக் காணுதல்.

கொச்சகக்கலிப்பா.

ஆணாகிப் பெண்விரக மாற்றாமற் போனசிங்கன்
பூணாகப் பாமபணிவா பொன்னகர்சூழ் நன்னகரின்
சேணார் பெருந்தெருவிற் சிஙகியைமுன் றேடிவைத்துக்
காணாமற் போனபொருள் கண்டவர்போற் கண்டானே(111)

விருத்தம்.

சீதமதி புனைந்தவாகுற் றாலநாதர்
திருநாட்டி விருவருந்தாங் கண்டபோது
காதலெனுங் கடலபெருகித் தரிகொள்ளாமற்
கைகலக்கும போதுகரை குறுக்கிட்டாற்போல்
வீதிவந்து குறுக்கிட்வே நாணமபூண்ட
விண்ணாணச் சிங்கிதனைக் கண்டுசிங்கன்
தூதுவந்த நளனானன் கன்னிமாடந்
துலங்குதம யந்தியவ ளாயி னாளே (112)

---

திக்கிலடங்காதது-திசைகளிலடங்காது; அப்புறமுஞ்செல்லுமென்ற படி. இக்கில்-கரும்பில். மைக்குள்ளடங்காது விழி-அஃதாவது: மற்றைப் பெண்கள் கண்போல் இவள்கண மைபூசி யழகுசெய்யப்பெறாது என்ற படி. கைக்குள் - கைவசத்தில்.

(3) சித்திரசபேசர்-சித்திரசபையிலிருக்கும் நடேசர். குத்தி-சாரா யம் வைக்கும் ஒருவித பாத்திரம். அரக்கு - சாராயம். குடுவை - கள் அடைக்கும் ஒருவித ஓலைப்பெட்டி,

(111) ஆற்றாமல்-சகியாமல். பூணாக-ஆபரணமாக. பொன்னகர் - பொன்னுலகத்தவர் (ஆகுபெயர்). சேண் - நீளம்,

(112) சீதம்-குளிர்ச்சி. தரிகொள்ளாமல்-அடங்காமல். வீதி-தெருவி லுள்ள சனங்கள் (ஆகுபெயர்). விண்ணாணம் - ஒருவித மாயாவித்தை. தூதுவந்த நளனானென்பது - தமயந்தியிடம் இந்திரன் முதலியோருக் காகத் தூதுபோன நளன் தமயந்தியை நேரிலேகண்டும் தூதுக்குவிரோத மென்று தழுவாமலிருந்தனன். அதுபோலச் சிங்கியை நேரிற்கண்டுஞ் சிங்கன் சனங்கள் கூட்டத்தைக்கண்டவுடன் கை கலத்தற்கிடமில்லாம லிருந்தன னென்பதாம். கன்னிமாடம் - விவாகமில்லாத பெண்களிருப் பதற்குச் செய்த மாளிகை. அவள் - அந்தச் சிங்கியாகிய குறத்தி.

இராகம்-எதுகுலகாம்போதி. தாளம்-சாப்பு.

பல்லவி.

இங்கே வாரா யென்கண்ணே யிங்கே வாராய்

அநுபல்லவி.

இங்கே வாராய் மலர்ச் செங்கை தாராய் மோகச்
சங்கை பாராய் காமச்சிங்கியாரே (இங்கே)

சரணங்கள்.

(1) பாதம் நோமே நொந்தால் மனம் பேதமாமே
பாதநோக நிற்ப தேது பாவமினிக்
கூதலோ கொடிது காதலோ கடினம் (இங்கே)

(2) பாவிதானே மதனகணை யேவி னானே
காவில மாங்குயிலகள் கூவிக் கூவியென
தாவி சோருதுணை யாவியாவிக் கட்ட (இங்கே)

(3) வருக்கை மூலர்வட வருவித் திருக்குற்றாலர்
பெருக்கம் பாடிக்கொள்ள மருக்கள் சூடிக்கொள்ள
ஒருக்கா லாடிக்கொள்ள இருக்காற்கூடிக்கொள்ள (இங்கே)
(113

## சிங்கன் சிங்கியை மகிழ்வித்தல்.

கொச்சகக் கலிப்பா.

தொண்டாடுஞ் சுந்தரர்க்குத் தோழர் திரி கூடவெற்பிற்
றிண்டாடி நின்றசிங்கன் சீராடுஞ் சிங்கிதனைக்

---

(113) மோகச்சங்கை - மோகத்தினளவு. சிங்கியாரே ' என்பதில் ஆர் என்பது அசைநிலை.

(1) பேதம் - வேறுபாடு. காதல் - ஆசை. கடினம் - அதிகம்.

(2) கூவி - கூவப்பட்டு. ஆவியாவி - தழுவித்தழுவி.

(3) வருக்கை மூலர் - பலாமரத்தடியிலுள்ளவராகிய. மருக்கள் வாசனைப்பூக்கள் (ஆகுபெயர்)

(114) தொண்டாடும்-பணிவிடைசெய்யும் திண்டாடி-மயங்கி.

கண்டாடித் துள்ளாடிக் கள்ளாடுந் தும்பியைப்போற்
கொண்டாடிக் கொண்டாடிக் கூத்தாடிக்கொண்டானே. (114)

## சிங்கனுக்கும் சிங்கிக்கும் சம்வாதம்.

இராகம்-தன்யாசி. ஆதிதாளம்.

கண்ணிகள்.

(1) இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல்
எங்கே நடந்தாயடீ சிங்கி (எங்கே நடந்தாய் நீ)

(2) கொத்தார் குழலார்க்கு வித்தாரமாகக்
குறிசொல்லப் போனனடா சிங்கா (குறிசொல்லப் போனனடா)

(3) பார்க்கி லதிசயந் தோணுது சொல்லப்
பயமா யிருக்குதடி சிங்கி (பயமா)

(4) ஆர்க்கும் பயமில்லைத் தோணின காரியம்
அஞ்சாமற் சொல்லடா சிங்கா (அஞ்சா)

(5) காலுக்கு மேலே பெரிய விரியன்
கடித்துக்கிடப்பானேன் சிங்கி (கடித்து)

(6) சேலத்து நாட்டிற் குறிசொல்லிப்பெற்ற
சிலம்பு கிடக்குதடா சிங்கா (சிலம்பு)

(7) சேலத்தா ரிட்ட சிலம்புக்கு மேலே
திருகு முருகென்னடி சிங்கி (திருகு)

(8) கோலத்து நாட்டார் முறுக்கிட்ட தண்டை
கொடுத்த வரிசையடா சிங்கா (கொடுத்த)

(9) நீண்டு குறுகிய நாங்கூழுப்போல
நெளிந்த நெளிவென்னடி சிங்கி (நெளிந்த)

---

துள்ளாடி - துள்ளி. கள்ளாடும் - கள்ளிலே மூழ்கும்.

(1) எங்கே நடந்தாயடி சிங்கி (எங்கே நடந்தாயடி) என்றும்பாடம்.

(2) கொத்து - பூமாலை (ஆகுபெயர்).

(5) விரியன் - ஒரு வகைப்பாம்பு.

(6) சிலம்பு - பாதசரம்.

(8) கோலத்து நாட்டார்-கலிங்க நாட்டார். முறுக்கிட்ட தண்டை-முறுக்குத்தண்டை. வரிசை-சன்மானம்.

(9) நாங்கூழு - ஒரு நிலப்பூச்சி.

(10) பாண்டிய னூர்மகள் வேண்டுங் குறிக்காகப்
பாடக மிட்டதடா சிங்கா (பாடக)

(11) மாண்ட தவளையுன் காலிலே கட்டிய
மாரகம தேதுபெண்ணே சிங்கி (மார்க்க)

(12) ஆண்டவர் குற்றாலர் சந்நிதிப் பெண்கள்
அணிமணிக் கெச்சமடா சிங்கா (அணிமணி)

(13) சுண்டு விரலிலே குண்டலப் பூச்சி
சுருண்டு கிடப்பானேன் சிங்கி (சுருண்டு)

(14) கண்டிய தேசத்திற் பண்டுநான் பெற்ற
காலாழி பீலியடா சிங்கா (காலாழி)

(15) மெல்லிய பூந்தொடை வாழைக்குருத்தை
விரித்து மடித்ததார் சிங்கி (விரித்து)

(16) நெல்வேலி யார்தந்த சல்லாச சேலை
நெறிபிடித்த துடுத்தினேன சிங்கா (நெறிபிடி)

(17) ஊருக்கு மேக்கே யுயர்ந்த அரசிலே
சாரைப்பாம்பேது பெண்ணே சிங்கி (சாரை)

(18) சீர்பெற்ற சோழன குமாரத்தி யார்தந்த
செம்பொ னரைஞாணடா சிங்கா (செம்பொ)

(19) மார்பிற்கு மேலே புடைத்த சிலந்தியிற்
கொப்புளங் கொள்வானேன சிங்கி (கொப்பு)

(20) பாருக்கு ளேற்றமாங் காயலார் தந்த
பாரமுத்தாரமடா சிங்கா (பார)

(21) எட்டுப பறவை குமுறுங் கமுகிலே
பத்தெட்டுப் பாம்பேதடி சிங்கி (பத்தெ)

(22) குட்டத்து நாட்டாருங் காயங் குளத்தாரு
மிட்ட சவடியடா சிங்கா (இட்ட) (115)

---

(11) 'மார்க்கம தேதடி சிங்கி' என்றும் பாடம்.

(15) தொடை - தொடையினிடத்து. 'விரித்து மடிக்தவரார்சிங்கி' என்றும் பாடம்.

(16) சல்லாச்சேலை - ஒரு வகை மிருதுவான சேலை. 'சல்லாபச் சேலை' என்றும்பாடம்.

(17) ஊரு - தொடை. மேக்கு - மேற்பக்கம். அரசு - அரசிலை போன்ற அல்குல்.

(19) சிலந்தி - முலை (உருவகம்)

(20) காயல்-காயற்பட்டணம். 'காயல்ரார் தாக்தந்த' என்றும்பாடம்.

(21) (எட்டுப்பறவை) 93-ம் பாட்டுரையிற் சொல்லப்பட்ட பறவைகள். குமிறும் - முழங்கும். கமுகு-கண்டம் (ஆகுபெயர்)

மேடி வேறு.

இராகம்-புன்னாகவராளி. ஆதி தாளம்.

கண்ணிகள்.

(1) வள்ளிக் கொடியிலே துத்திப்பூப் பூப்பானேன் சிங்கி காதில்
வங்காளத்தாரிட்ட சிங்காரக் கொப்படா சிங்கா

(2) கள்ளிப்பூப் பூத்த ததிசயமல்லவோ சிங்கி தெற்கு
வள்ளியூ ரார்தந்த மாணிக்கத் தண்டொட்டி சிங்கா

(3) வன்னக் குமிழிலே புன்னையரும்பேது சிங்கி மண்ணில்
முந்நீர்ச் சலாபத்து முத்துமூக் குத்திகாண் சிங்கா

(4) சொருகிமுடித்ததிற் றாக்கணமேதடி சிங்கி தென்
குருகையூ ரார்தந்த குப்பியுந் தொங்கலுஞ் சிங்கா

(5) பொன்னிட்ட மேலெல்லா மின்வெட்டிப் பார்ப்பானேன் சிங்கி யிந்த
வன்னப் பணிகளின் மாணிக்கக் கல்லடா சிங்கா

(6) இந்தப் பணியை நீ பூணப் பொறுக்குமோ சிங்கி பூவில்
ஈசர்க்கும நல்லார்க்கு மெல்லாம பொறுக்குங்காண சிங்கா

(7) குன்றத்தைப்பார்த்தாற் கொடியிடை தாங்குமோ சிங்கி
கொடிக்குச் சுரைககாய் கனத்துக்கிடக்குமோ சிங்கா

(8) இலலாத சுற்றெலலா மெங்கே படித்தாய் நீ சிங்கி நாட்டில்
நல்லாரைக் காண்பவர்க கெலலாம வருமடா சிங்கா

(9) பெட்டகப் பாமபைப் பிடித்தாட்ட வேண்டாமோ சிங்கி
வெட்ட வெயிலிலே கோடிப்பாம பாடுமோ சிங்கா (இந்த

---

(3) குமிழ்-மூக்கு (உவமை ஆகுபெயர்). முந்நீர் - கடல். சலாபம் - முத்துக்கொழித்தெடுக்குமிடம்.

(5) பொன்னிட்ட - பொன்போன்ற மின்வெட்டிப் பார்த்தல்- பிரகாசப்படுதல்.

(6) இந்தப்பணியை-இந்த ஆபரணத்தை (சந்திரன் கங்கையாகிய ஆபரணத்தை. (இந்து-சந்திரன். அப்பு-கங்கை )

(7) குன்றத்தை - மலைபோன்ற முலையை.

(8) சுற்று - சுழற்சி.

(9) பெட்டகப்பாம்பு - பெட்டியில் மூடி வைத்திருக்கும் பாம்பு போன்ற அல்குல். கோடிப்பாம்பு - சாதிப்பாம்பு; நல்ல பாம்பு.

10 கட்டிக்கொண் டேசற்றே முத்தங் கொடுக்கவா சிங்கி நடுப்
பட்டப்பகலில்நா னெட்டிக் கொடுப்பேனோ சிங்கா
11 முட்டப்படாமுலை யானையை முட்டவோ சிங்கி காம
மட்டுப் படாவிடில் மண்ணோடே முட்டடா சிங்கா
12 சேலையுடைதனைச் சற்றே நெகிழ்க்கவோ சிங்கி சும்மா
நாலுபேர் முன்னெனை நாணங் குலையாதே சிங்கா
13 பாதம்வருடித் துடைகுத்த வேண்டாமோ சிங்கி மனப்
போதம் வருடிப்போய் பூனையைக்குத்தடா சிங்கா
14 நாக்குத் துடிக்குதுன் னல்வாயிதழுக்குச் சிங்கி யுன்றன்
வாய்க்கு ருசிப்பது மாலைக்கள் ளல்லவோ சிங்கா
15 ஒக்கப்படுக்க வொதுக்கிடம் பார்க்கவோ சிங்கி பருங்
கொக்குப் படுக்கக் குறியிடம் பாரடா சிங்கா
16 விந்தைக் காரியுன்னை வெல்லக்கூடாதடி சிங்கி யது
சந்தேகமோவுன் றலைப்பேனைக் கேளடா சிங்கா
17 தென்னாடெல்லா முன்னைத் தேடித்திரிந்தேனே சிங்கி யப்பா
விந்நாட்டில் வந்தென்னை யெப்படி நீ கண்டாய் சிங்கா
18 நன்னகர்க் குற்றால நாதரை வேண்டினேன் சிங்கி மணிப்
பன்னகம் பூண்டாரைப் பாடிக்கொள்வோமடா சிங்கா
19 பாடிக்கொள் வாரெவ ராடிக்கொள் வாரெவர்சிங்கி நீதான்
பாடிக்கொண் டாற்போது மாடிக்கொள்வேனடா சிங்கா
20 பார்க்கப்பொறுக்குமோ பாவியென் னாவிதான்சிங்கி முன்னே
யாக்கப்பொறுத்தவ ராறப்பொறார்களோ சிங்கா

---

11. முட்டவோ - மோதவோ.

13. வருடி-தடவி; பற்றி. மனப்போதம் வருடி - மன அறிவைப் பற்றி.

15. ஒக்க - ஒருமிக்க; ஒன்றாக. கொக்குப்படுக்க - கொக்கைப் பிடிக்க.

16. விந்தை - விநோதம்; வேடிக்கை. தலைப்பேனைக்கேள்-அஃதாவது: தலைப்பேனொன்றை யெடுத்து ஒரு நாழிக்குள்ளே யடியிலே போட்டு நெல்லை நிறைய அளந்துவைத்து அதன்மே லொரு மஞ்சளையுங் கரியையும் வைத்தால் அடியிலேயிருக்கும் பேன் மஞ்சளிலேறினால் நல்லதென்றுங் கரிமேலேறினாற் கெட்டதென்றுந் தெரிந்துகொள்ளுதல்; இதுவும் பழைய வழக்கு.

18. பன்னகம் - பாம்பு.

## வாழ்த்து.

### வெண்பா.

*சுற்றுத ஊர்தோறுஞ் சுற்றவேண் டாமபுலவீர்*
*குற்றால மென்றொருகாற் கூறினால்— வற்று*
*வடவருவி யான் மறுபிறவிச் சேற்றில்*
*நடவருவி யானே நமை.* (117)

### கண்ணிகள்.

1 *கொற்றமதிச் சடையானைக் குறும்பலா வுடையானை*
*வெற்றிமழுப் படையானை விடையானை வாழ்த்துகிறேன்*
2 *தாதையிலாத திருமகனைத் தடமலைக்கு மருமகனை*
*வேத சங்க வீதியனை வேதியனை வாழ்த்துகிறேன்*
3 *தந்திமுகத் தொருகோனைத் தமிழிலஞ்சி முருகோனை*
*மைந்தரெனு மிறையோனை மறையோனை வாழ்த்துகிறேன்*
4 *தீமுகத்திற பறிகொடுதத திருமுடிக்கா ஒரு முடியை*
*மாமனுக்கு வரிசையிட்ட மாமனைநான் வாழ்த்துகிறேன்*
5 *காமனுக்கும பூமனுக்குங் கன்னி தெய்வ யானைககு*
*மாமனென வேபகரும் வள்ளறனை வாழ்த்துகிறேன*
6 *நீடுலகெ லாமளந்த நெடியமா லுமயனுந்*
*தேடரிய திரிகூடச் செல்வனையான வாழத்துகிறேன்*
7 *சித்ரநதி யிடத்தானைத் தேனருவித் தடத்தானைச்*
*சித்ரசபை நடத்தானைத் திடத்தானை வாழத்துகிறேன்*
8 *பனகவணி பூண்டவனைப் பத்தர்களை யாண்டவனை*
*யனவரத தாண்டவனை யாண்டவனை வாழ்த்துகிறேன்*

---

117. *நட - நடுதற்கு. வருவியான் - வரவழைக்கமாட்டான்.*

1. *கொற்றம் - வெற்றி.*

2. *தாதை - பிதா.*

3. *தந்தி - யானை. கோனை - தலைவனை.*

4. *தீமுகத்தில் - யாகத்தீயிடத்தில். திருமுடிக்கா - சிறந்த தலைக்காக. ஒரு முடியை-ஆட்டின் தலையை. மாமனுக்கு - மாமனாகிய தக்கனுக்கு. வரிசையிட்ட - உபசாரப்பொருளாகக்கொடுத்த. மாமனை-பெரிய தலைவனை. இச்சரிதம் கந்தபுராணத்திற் காணலாம்.*

5. *பூமன் - பிரமன்.*

8. *பனகவணி - சர்ப்பாபரணம்.*

9 அரிகூட வயனாகி யரனாகி யகலாத
திரிகூடப் பரமபரனைத் திகம்பரனை வாழ்த்துகிறேன்

10 சிற்றாற்றங் கரையானைத் திரிகூட வரையானைக்
குற்றாலத் துறைவானைக் குருபரனை வாழ்த்துகிறேன்

11 கடகரியை யுரித்தவனைக் கலைமதியந் தரித்தவனை
வடவருவித் துறையவனை மறையவனை வாழ்த்துகிறேன்

12 ஆதிமறை சொன்னவனை யனைத்துயிர்க்கு முன்னவனை
மாதுகுழல் வாய்மொழிசேர் மன்னவனை வாழ்த்துகிறேன்
(118)

## விருத்தம்.

வார்வாழுந் தனத்திகுழல் வாய்மொழியம் பிகைவாழி வதுவை சூட்டுந்
தார்வாழி திரிகூடத் தார்வாழி குறுமுனிவன் றலைநாட்சொன்ன
பேர்வாழி யரசர்கள்செங் கோல்வாழி நன்னகரப் பேரா லோங்கு
மூர்வாழி குற்றாலத் தலத்தடியார் வாழிநீ டூழி தானே (119)

---

(11) கடகரி - மதயானை.

(119) வதுவை - கல்யாணத்தில். சொன்னபேர் - சொல்லப்பட்டவர்.

முற்றும்.

உ

# திருக்குற்றால மாலை.



மேலகரம் மகா கவி
திரிகூடராசப்பன் கவிராயர் இயற்றியது.

திருக்குற்றாலநாதசுவாமி கோயில் வெளியீடு.



T. S. சங்கரநாராயணபிள்ளை B. A., B. L.,
*மானேஜிங் தர்மகர்த்தர்.*

A. C. ஷண்முகநயினார் பிள்ளை B. A., B. L.,
*(அட்வகேட்)*
M. சுப்பிரமணியக் கரையாளர்,
*(மிட்டாதார்,)*
*தர்மகர்த்தர்கள்.*

*ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், தென்காசி.*

1945

உ

கடவுள் துணை

# திருக்குற்றால மாலை



## காப்பு.

பூமண்டலம்பரவும்புங்கவர்குற்றாலலிங்கர்
நாமஞ்சேர்பாமாலை நாட்டவே—தாமஞ்சேர்
தந்தமதத்தந்திமுகத்தந்தைதுணைச்செந்தினகர்க்
கந்தனிணைச்செஞ்சரணங்காப்பு.

## நூல்.

மொழிகொண்டமூவர் திருப்பாடல்கற்றுமுழுதுமுன்பால்
வழிகொண்டபேரன்புவைப்பதென்றோகுழல்வாய்மொழிப்பெண்
விழிகொண்டகாட்சிக்கெளியாய்பெண் பூமிபொன்வேட்கையெல்லா
மொழிகொண்டதொண்டர்க்குரியாய்குற்றாலத்துறைபவனே (1)

எனக்கேறநின்வழிநில்லாமல்யானெனதென்னும்வழி
தனக்கேறியைவர்தடையிற்பட்டேன்றடைதீர்ப்பதற்கோ
கனக்கேளுனையன்றிக்காணேன்முழுதுமுன்கையிற்பிள்ளை
யுனக்கேயடைக்கலங்கண்டாய்குற்றாலத்துறைபவனே (2)

பொன்னைப்பரமென்றுமின்னார்கலவிப்புலவியின்பந்
தன்னைப்பரமென்றுமேயிருந்தேன்யமதண்டம்வந்தாற்
பின்னைப்பரமொன்றுங்காணேனுனதருட்பேறருள்வா
யுன்னைப்பரமென்றுசார்ந்தேன்குற்றாலத்துறைபவனே (3)

ஆக்கமுண்டாகமகிழ்ச்சியுண்டாகியுமல்லவென்றா
லேக்கமுண்டாகியுமேயிளைத்தேனன்பரின்பக்கல்வித்
தேக்கமுண்டாகியுந்தேறேனெனைமுற்றுந்தேற்றுகண்டா
யூக்கமுந்தூக்கமுமில்லாய்குற்றாலத்துறைபவனே (4)

அருமந்தநின்னருள்போற்றேன்பொசிப்புக்கமைத்தபடி
வருமென்றிருக்கவுமாட்டேன்பிறவிமயக்கமறக்
குருவென்றுநீவந்துதோன்றாய்முன்மூவர்கள்கோட்டைகொன்ற
வொருமந்தகாசப்படையாய்குற்றாலத்துறைபவனே (5)

பெற்றார்தம்பிள்ளைகளேவறியார்பிள்ளைநோவறிந்தா(ர்)
சற்றாகிலுமபகிர்ந்தாற்றரியார்தந்தைதாயினுமென்
பற்றாப்பசிகண்டமுதூட்டிநோயறப்பாராககவலல
வுற்றாருனையன்றியுண்டோகுற்றாலததுறைபவனே (6)

மறையாடுந்தெய்வத்திரிகூடஞ்சார்ந்துவடவருவித்
துறையாடியுன்னைதொழுவதென்றோதடஞ்சோலையெல்லாஞ்
சிறையாறுகால்வண்டுபணபாடமாந்தளிர்ச்செஙகரத்தா
லுறையாடுந்தேனமுதூட்டுங்குற்றாலத்துறைபவனே (7)

கிள்ளைகள்போற்படித்தாவதிங்கேதுன்கிருபையின்பால்
பிள்ளைகள்போலுண்ணப்பேறருள்வாய்கிளிப்பிள்ளையெலலாம்
வள்ளைகள்பாடுஞ்சித்ராநதியாயன்புவைத்ததொண்ட
ருள்ளையெல்லாங்கொள்ளைகொண்டாய்குறறால்த்துறைபவனே()

ஆசையெலாம்பொருண்மேலாயொருவனகத்திலிரா
வேசையுமென்னெஞ்சுமொககுங்கண்டாய்விணணுளோர்புரியும்
பூசையம்போருகத்தாளாய்நிறைநதசம்பூரணமா
மோசையும்விந்துவுமாவாய்குற்றாலத்துறைபவனே (9)

கருக்கொண்டபோதுள்ளுங்கன்மவியாதிகருவிலுருப்
பெருக்கும்பொழுதுநெருக்குமவியாதிபிறந்துபினனை
யிருக்குஞ்சடமும்வியாதியென்றாலிதைநம்பிநன்றா
யுருக்குஞ்செனனமெடுத்தேன்குற்றாலத்துறைபவனே (10)

கன்மமரும்பியவாவீங்கியைம்புலன்கண்கள்வைத்துப்
பன்மலஞ்சீக்கொண்டசென்மவியாதிபழுத்துவந்தாற்
றனமவயித்தியன்சத்ரமிடாமறறவிர்க்கமருந்
துன்மலர்த்தாளிணைதாராய்குற்றாலத்துறைபவனே (11)

அமையம்பலவுமொருபொழுதாயசையாமலுன்றன்
சமயங்கருததவமெய்துமோசண்பகாடவிசூழ்
இமயம்பெறுமங்கைசுந்தரிகோமளையாமளையென்னும்
உமையம்பிகைமணவாளாகுற்றாலத்துறைபவனே (12)

பூங்காரணிகுழலார்மயக்கான்மனம்புத்திசித்த
மாங்காரந்தட்டழிவேற்கிரங்காயன்புநீர்பெருகித்
தேங்காமற்றேங்குமனத்தார்பரவித்தியானஞ்செய்யு
மோங்காரவட்டத்தொளியேகுற்றாலத்துறைபவனே (13)

முன்வடிவாய்முன்னிருந்திடலேதுமுளைக்கருவாப்
பின்வடிவார்க்கும்வினைவடிவேதுகைபேணிநின்ற
வென்வடிவேதுபின்யானென்பதேதென்னையாட்டிவைக்கு
முன்வடிவேதுகொல்சொல்லாய்குற்றாலத்துறைபவனே (14)

நில்லாவுடம்பிலுயிர்நின்றதோவுயிர்நின்றிடத்தே
யெல்லாவுடம்புநிலைநின்றதோவியல்சேர்வடிவும
பல்லாவுயிருமொன்றேபுறம்போபகையோவுறவோ
வொல்லாமலோர்வழிசொல்லாய்குற்றாலத்துறைபவனே (15)

வருநாளவர்கண்மனைசந்தைக்கூட்டம்வரவற்றநாட்
டிருநாட்கழிந்தமடமொக்குமேயிதைச்சிந்தித்துநான்
பருநாட்கழிப்பதுபாரையயான்பலநாளுமுன்னை
யொருநாளிற்காண்பதுரையாய்குற்றாலத்துறைபவனே (16)

வாசக்குழந்தையுமாய்மடவார்மணவாளனுமாய்
ஆசைப்பருவமதுதப்பினுலந்தமாதருங்கண
கூசக்கிழங்கொண்டுதோலாகிநாற்றங்குலைக்குமிந்த
வூசச்சடமென்றுபோமோகுற்றாலத்துறைபவனே (17)

திருத்தப்புகுந்திடிலண்டங்கள்கோடிதிருத்துவையென்
கருத்தைத்திருத்தவுனக்கரிதோகௌவைகாட்டுங்கன்ம
வருத்தத்தைமாறறவோர்மாறறங்கொடாய்குழல்வாய்மொழியா
ளொருததிக்கோர்பாகங்கொடுத்தாய்குற்றாலததுறைபவனே (18)

காணுறக்கண்டுனைப்போற்றறியார்கடையாம்பொசிப்பும்
வீணுறக்கங்களுமேகுறிப்பாரருள்வெள்ளத்தின்பால்
சேணுறக்கண்டுசிவயோகநித்திரைசெய்யுமன்ப
ரூணுறக்கங்குறிப்பாரோகுற்றாலத்துறைபவனே (19)

நிறையும்பிரணவமூடாச்சதுர்மறைநீண்டகொப்பா
வறைகின்றசாகைகிளையாவறமுதனுன்கரும்பிக் .
குறைவின்றிஞானமணநாறுந்தெய்வக்குறுமபலவி
லுறைகின்றமுக்கட்கனியேகுற்றாலத்துறைபவனே (20)

எல்லாவடிவுமொன்றானாலுமங்கங்கிருந்துநல்லார்
பொல்லாரெனவிளையாட்டியதாலதுபோன்மனத்திற்
கல்லாமைகற்பிக்குமென்பாசநேசங்கருதிலன்ப
ருல்லாசநேசமொப்பாமோகுற்றாலத்துறைபவனே (21)

அருவித்துறைபடிந்தாடிவெண்ணீறிட்டுனன்பர்தம்பான்
மருவிப்பணிலமறுகூடுவந்துன்னைவாழ்த்தும்வண்ணங்
கருவிப்பவமறுகூடுசெல்லாக்கதிகாட்டுகண்டா
யுருவிற்குவமையொன்றில்லாய்குற்றாலத்துறைபவனே (22)

விருத்தரையும்வெல்லுமெல்லியர்நேசம்விடுத்துநின்பா
லிருத்தரைமாத்திரைக்கேயைவரோடலையேத்துமுண்மைக்
கருத்தரைக்கண்டுகருதாமற்சிந்தைகபாடஞ்செய்தா
லொருத்தரைநோவதழகோகுற்றாலததுறைபவனே (23)

நானாரெனதுடம்பேதுணர்வேதெனைநாட்டினைநீ
யானாரெனத்தெளியேனெளியேன்செண்பகாடவிசூழ்
கானார்சிவமதுகங்கையின்மூழ்கக்கருணைசெய்தே
யூனாற்பிறவியொழிப்பாய்குற்றாலத்துறைபவனே (24)

வேம்பேபுழுவுக்கதிரசமாய்வெவ்விடங்கிடந்த
பாம்பேகலுழனுக்காரமுதாய்ப்பற்பலவுயிர்க்கு
மாமபேதபேதமட்டூட்டியதால்வினையாம்பொசிப்பை
யோம்பேனருளமுதூட்டாய்குற்றாலத்துறைபவனே (25)

குன்றாதஞானக்கனியையஞ்ஞானக்கொடும்பசிக்குத்
தின்றேகவென்னினுமைவரொட்டார்திகைத்தேங்கிமனங
கன்றாமலுன்னருளூடாடியுள்ளனுங்கள்ளனும்போ
லொன்றாகுநாளினியென்றோகுற்றாலத்துறைபவனே (26)

பொன்னென்றுசொன்னவுடனேமயக்குமென்புத்தியைநா
னென்னென்றுசொல்லித்திருத்திக்கொள்வேனெனையீன்றுசெஞ்சொற்
பன்னென்றுசொன்னபடிபோலவுள்ளபடியைநெஞ்சி
லுன்னென்றுபோதித்தருள்வாய்குற்றாலத்துறைபவனே (27)

நாறுங்குரம்பைக்குள்ளேமருண்டேனுனைநாடிமனந்
தேறும்படிக்கொருதேற்றஞ்சொல்வாயனபுதேக்கியுள்ளே
யாறுங்கருத்தினர்சித்தாம்புயத்திலருட்பெருக்கா
யூறுஞ்சிவானந்தத்தேனேகுற்றாலத்துறைபவனே (28)

ஆற்றிற்குமிழியின்றேற்றங்கள்போலண்டகோடியெல்லாந்
தோற்றிக்கணப்பொழுதேமறைப்பாய்துறைப்பாவிலுன்சீர்
சாற்றித்துதிப்பவர்முன்வருவாய்சண்டனென்னுயிரை
யூற்றிக்குடிக்குமுன்வாராய்குற்றாலத்துறைபவனே (29)

திடம்போதவுணணக்கிடைத்தானடக்குஞ்சிலகுறைந்தான்
முடம்போற்கிடக்குமிருந்தாலுவாதிக்குமுன்கொடுத்த
கடன்போலனுதினங்கைக்கூலிவாங்குங்களிசலிந்த
வுடம்போடிருப்பதெளிதோகுற்றாலத்துறைபவனே (30)

மழைமுகந்தேடும்பயிர்முகம்போலநின்வாய்த்தசங்கக்
குழைமுகந்தேடுமென்சிந்தைகண்டாய்கொன்றைவேணிவில்லத்
தழைமுகந்தாடமறைபாடச்சித்ரசபையினின்றே
யுழைமுகந்தாடுங்கரத்தாய்குற்றாலத்துறைபவனே (31)

வெண்மைப்பொருளின்விவகாரங்கணீங்கிவிகாரமில்லாத்
திண்மைப்பொருளென்றுசேருங்கொல்லோசிந்தைசெய்யுமன்பர்
வண்மைப்பெருமபெருக்கேயொருக்காலுமவுனம்விடா
ருண்மைச்சிவானந்தவாழவேகுற்றாலத்துறைபவனே (32)

கற்பனையாஞ்செகவாழ்க்கையெல்லாங்கண்டுகண்விழிக்குஞ்
சொற்பனமாமென்றுதூஷணியேனியான்றூஷணிக்க
நிற்பனவேண்டுநெறியிலியேனைனீபுரப்பா
யுற்பனஞானப்பொருளேகுற்றாலத்துறைபவனே (33)

அருவமென்றோருக்கருவமுற்றாய்தம்மறிவுமட்டுஞ்
சொருவமென்றோர்க்குச்சொரூபமுற்றாய்தொல்லைமூவுலகுஞ்
செருவில்வெல்வாய்படைப்பாயளிப்பாயுன்றிருவிளையாட்
டொருவிளையாட்டல்லகண்டாய்குற்றாலத்துறைபவனே (34)

வென்றறியாச்சமர்வெல்பவராகிலும்வெவ்வினையைச்
சென்றறிவால்வெல்லவல்லருண்டோநின்செயல்பிரிந்தால்
நன்றறிவாருமிரப்பாருனதருணாட்டம்பெற்று
லொன்றறியாருலகாள்வார்குற்றாலத்துறைபவனே (35)

பூதாதிபல்லுயிர்க்குந்தலையானநின்பொற்சிலம்பின்
பாதாமபுயஞ்சென்னிசேர்த்தருள்வாய்பெரும்பார்படைக்கும
வேதாவின்மேல்விதியேவித்தில்லாமல்விளைபொருளே
யோர்தாதுணருமுணர்வேகுற்றாலத்துறைபவனே (36

படையாதசென்மமுமேன்படைத்தாய்பஞ்சபூதவெறி
விடையாதியிலவிடவோவிடவோமெத்தவேமெலிந்து
கடையாயினேனிரங்காயொருபாகங்கவுரிகொண்டா
யுடையாய்கரநதைச்சடையாய்க்குற்றாலத்துறைபவனே (37)

அடுக்குறுந்துன்பமுமின்பமுமாயவலையடித்து
நடுக்குறுஞ்செனமக்கடல்புகுநதேநலியாமலென்னை
யெடுககுறுநினனருட்பேரினபத்தோணியிலேறறுகண்டா
யொடுக்கமுந்தோறறமுமிலலாய்குறறாலததுறைபவனே (38)

இருகாதுகேட்கில்வருயானைசயற்பமிருகண்கண்டாற்
பெருகாசைகொண்டுபிதற்றியதாற்பெரும்பேதமையாற்
கருகாதவண்ணங்கருகிநொந்தேன்கருத்தாறியுனபா
லுருகாதநெஞ்சனையாள்வாய்குறறாலத்துறைபவனே (39)

பொன்மேருவத்தனைபொன்குவித்தாலுமென்புத்தியின்ன
மென்மேலுந்தேடநினைக்குங்கணடாய்வினைபோக்கறவே
யென்மேற்றயாவினுமெணமடங்காவெநதக்காலமுநா
னுன்மேன்மனம்வைப்பதென்றோகுற்றாலத்துறைபவனே (40)

பன்னாளுங்காமம்பொறுத்திருந்தாலும்பசியொருநா
ளொன்றாற்பொறுக்கப்படாதுகண்டாயிதையார்க்குரைப்பேன்
சொன்றாற்பகுத்தறிவார்க்கண்டிலேன்சுற்றிப்பார்க்கிலெங்கு
முன்றாற்பதமனறிக்காணேன்குற்றாலத்துறைபவனே (41)

விரகப்படாமணிக்கொங்கையர்காமத்தில்வீழ்ந்துபொல்லா
நரகப்படாமலெனைப்புரப்பாயுண்மைஞானமொன்றிக்
கிரகப்படாமனத்தார்க்குரியாய்மதிக்கீறணிந்த
உரகச்சடாடவியானேகுறறாலத்துறைபவனே (42)

வேறுபடாமலுலகாண்டமன்னரும்வெந்துடல
நீறுபடாரில்லைநீணிலத்தேநெடுமபாசவினைத்
தூறுபடாவழிபார்த்தியென்றேன்சொலச்சொல்லமன
மூறுபடாதென்னசெய்வேன்குற்றாலத்துறைபவனே (43)

மறுக்கிச்சுறுக்கென்றெமதூதர்வந்துங்கவாளெடுத்துக்
குறுக்கித்தறுக்குமுன்னேவருவாய்மந்திகுந்திவெள்வான்
முறுக்கிச்சுருக்கிக்குறித்துப்பலாப்பழமொக்கிவிக்கி
யுறுக்கித்தறுக்கிநடிக்குங்குற்றாலத்துறைபவனே (44)

வெறுமந்திமுன்னிருட்போல்வருங்காலன்வெகுண்டுயிரைத்
தெறுமந்தயகாலத்தின்முன்வருவாய்கனிதின்றுதட்டி
மறுமந்திமேற்செலத்தேன்பாயுங்கொமபுவழுகிவிழுந்
துறுமந்திகுந்திநடிக்குங்குற்றாலத்துறைபவனே (45)

அவப்பாடல்பாடியலைவதுதீரவனுதினமும்
சிவப்பாடல்பாடித்தெளிவதெனறோதெய்வப்பாடன்மறைத்
தவப்பாடல்காட்டுநற்றாருடையாய்கொன்றைத்தாருடையாய்
யுவப்பாடன்மாமன்றுடையாய்குற்றாலத்துறைபவனே (46)

வருபான்மதிவைத்தசெஞ்சடைக்காடும்வழுத்தமுத்தி
தருபாதமுமென்றுசந்திப்பனோமலைச்சாரலெலா
மிருபாலுமுத்துங்கனகமுமவாரியிறைத்துநித்த
மொருபாலருவிகுதிபாய்குற்றாலத்துறைபவனே (47)

செண்பகக்காவுநதிரிகூடமுஞ்சித்ரமாநதியுங்
கணபடைத்தார்பிரிந்தாற்றுவரோகன்மியாய்ப்பிறந்து
புண்படைதேனுக்கிரங்காயிரவிற்பொன்மேடையெலலா
மொணபகற்போலொளிவீசுங்குற்றாலத்துறைபவனே (48)

நீட்டிநினைப்பதைவேறுசெய்வாய்நினையாதவெல்லாங்
காட்டிவைத்தங்ஙனமேமறைப்பாயெனைக்காத்தருள்வா
யாட்டியசைக்கின்றசூத்திரத்தாலனைத்தாருயிர்க்கு
மூட்டியுறக்கநதருவாய்குற்றாலத்துறைபவனே (49)

மறவேன்மயக்கென்றுநெஞ்சில்விகாரத்தைவஞ்சமறத்
துறவேன்வெருட்டித்தொடருமில்வாழ்க்கையைச்சுற்றிச்சுற்றி
யறவேதளர்ந்துவிட்டேனிரங்காயென்றுமாசையற்று
றுறவேமெய்ஞ்ஞானநறவேகுற்றாலத்துறைபவனே (50)

பேசியவாய்மையெல்லாமுனைப்பேசியுன்பேரருளாம்
வாசியைமேற்கொண்டுவாழ்வதல்லாற்கவிவாணரென்றூற்
கூசியமூடரைப்பாடித்திண்டாடிக்கொடுங்கலியா
மூசியின்மேனிற்கப்போமோகுற்றாலததுறைபவனே (51)

கள்ளார்ந்தபூமணம்போலிருப்பாயுன்கருணையின்பத்
தெள்ளாரமுதுண்டுதேக்கியிராமற்றிகைததுநித்தம
வெள்ளாவினாற்றமுடைநாறுங்காயவிடக்குக்குநா
னுள்ளாசைவைத்ததுநன்றோகுற்றாலத்துறைபவனே (52)

குறைந்தாற்குறைந்துநிறைந்தானிறைந்தெவர்கோலத்துள்ளு
மறைந்தாயுன்கோலத்தையாரறிவாரென்னைவாழ்விகண்டாய்
அறைந்தாடருவிமலைச்சாரல்சூழ்செண்பகாடவியி
லுறைந்தாயுலகநிறைந்தாய்குற்றாலத்துறைபவனே (53)

ஆகாரநித்திரையேகாரணமென்றறமயங்கி
மாகாமிநான்கொண்டமாலொழிப்பாய்கங்கைமங்கையின்ப
மோகாகுழன்மொழிபாகாமெய்ஞ்ஞானத்தின்மோனம்விடா
யோகாவசந்தவைபோகாகுற்றாலததுறைபவனே (54)

வண்டாடும்பூங்குழல்கண்டாடும்பான்மொழிமாதர்மயல்
கொண்டாடிநித்தமுந்திண்டாடினேன்கொடுங்கூற்றுதைத்துக்
தண்டாமுனியுய்யக்கொண்டாயமரரைத்தாங்கவிட
முண்டாயடைக்கலங்கண்டாய்குற்றாலத்துறைபவனே (55)

சாலக்கொடும்பசிதாக்கநொந்தேன்வினைதாக்குகலி
காலத்தைவெல்லக்கருணைசெய்யாய்தனிக்காலங்கண்டு
வாலக்கிளிமொழியாரிசைவாதுக்குமாறனைப்போ
லோலக்கருங்குயில்கூவுங்குற்றாலத்துறைபவனே (56)

கையார்தொழிலுக்கெல்லாந்தொல்லைப்பாரங்கருத்திலஞ்சிச்
செய்யாதிருக்கிற்கடும்பசிபாரஞ்செய்துண்ணவென்றாற்
பொய்யாமுடம்பிறபிணிபாரநின்றுபுலம்புகின்றே
னுய்யாமைதீர்ததருளையாகுற்றாலத்துறைபவனே (57)

இம்பரைக்காமித்துவந்துநின்னன்பரையேத்தலன்றி
வம்பரைப்போய்வணங்காதருள்வாய்வண்டுகிண்டுமலர்க்
கொமபரைக்காதமணக்குந்திரிகூடக்குவட்டினின்றே
யும்பரைக்கானவர்கூவுங்குற்றாலத்துறைபவனே (58)

வெறுத்திடுந்தீவினைசெய்தாலுந்தொண்டனைவேண்டியென்றும்
பொறுத்தினியாளக்கடனுனக்கேமழைபோலிருள்போற்
கறுத்திடுங்கோதையர்பூந்தாளின்மாணிக்கக்கற்படிக
ளுறுத்திடுங்கோலமலைசூழ்குற்றாலத்துறைபவனே (59)

கொடுக்கச்சடைவற்றவுன்னையும்பாடிக்குலாமர்முன்போ
யிடுக்கட்படுவதழகல்லவேகவ்வையீடழிக்கு
நடுக்கத்தையாற்றப்படாதுகண்டாயெந்நாளுமுண்ண
வுடுக்கக்குறைவருந்தாதேகுற்றாலத்துறைபவனே (60)

பேராசைக்கள்ளத்தையுள்ளேயடக்கிப்பிறருக்கெல்லாம்
பாராசையற்றவர்போற்றிரிவேன்பசுத்தோல்புனைந்து
போராசைகொண்டபுலிநானென்றசையைப்போக்குகண்டா
யோராசையுமற்றவர்சேர்குற்றாலத்துறைபவனே (61)

கழிக்கும்பலபொழுதோர்பொழுதாய்க்கலங்காமலுள்ளே
விழிக்கும்விழி வெளியாவதென்றோவெண்ணிலாக்கதிரைப்
பழிக்குந்திரிகூடத்தருவிநன்னீர்பகலோனைவெம்மை
யொழிக்குந்திவலைதெளிக்குங்குற்றாலத்துறை பவனே (62)

செருமிக்கவலையுளந்தடுமாறித்தினமபொருமிப்
பொருமிக்கரைவதுகண்டிரங்காய்புல்லும்பூடுங்கல்லுந்
தருமிக்கபட்சிமிருகங்களாதிசராசரமு
மொருமிக்கத்தெய்வவடிவாங்குற்றாலத்துறைபவனே (63)

சிறையோபடுவதினிக்கவையோதினந்தான்படுதன்
முறையோமுறையிடல்கேட்கிலையோமுன்னைநாளிற்செய்த
குறையோகுறையுன்முன்னேநிற்குமோகொண்டகோபமென்றோ
உறையோங்குகொண்டலுலாவுங்குற்றாலத்துறைபவனே (64)

தண்டேன்மலர்சொரிசண்பகச்சோலையுஞ்சந்நிதியும்
பண்டேபழகுநின்சித்ராநதியும்பலவளமுங்
கண்டேபிரிந்துதரித்தேனென்போலொத்தகன்னெஞ்சர்தா
முண்டேநின்கற்பனைக்குள்ளேகுற்றாலத்துறைபவனே (65)

பொறுக்கும்படைகொண்டுகோபத்தைமாய்த்துப்புரையற்றுநான்
வெறுப்புவிருப்பற்றிருப்பதென்றோவண்டமவிண்டுகிறு
கிறுக்கும்படிமலையைச்சிலையாக்கிக்கிளர்புரங்க
ளொருக்குந்தனிப்பெருவீராகுற்றாலத்துறைபவனே (66)

வருக்காம்பலகரும்பைப்பார்க்கநன்றொருவட்டெனவே
பெருக்கர்சைவிட்டுநின்றுளபரவிப்பிறவியின்வேர்
கருககாமலென்றுமென்சிந்தைக்குள்ளேயொருக்காற்றெளிவு
மொருக்கான்மயக்கமுமாமோகுற்றாலத்துறைபவனே (67)

தருகோடியம்புயத்தாடொழும்போதுசதுரயுக
மிருகோடியுகொடிப்போதொக்குமேதுன்பமீட்டுங்கவ்வை
யருகோடியுன்னைப்பிரிந்தாலரைநொடிப்போதுமெனக்
கொருகோடிகோடியுகங்காண்குற்றாலத்துறைபவனே (68)

காண்பதெல்லாங்கண்மயக்கமென்றேமனங்கண் டிருந்தும்
வீணபலகௌவைக்குளோடியதாலவந்துமீட்டருளவாய
சேண்படர்கங்கைச்சடையாய்பிரமன்சிரத்திலென்று
மூண்பலிதேடுங்கரத்தாய்குற்றாலத்துறைபவனே. (69)

கண்பார்த்துச்சோரமிடுங்கள்வரைவர்கைகள் ளமிட்டுப்
பண்பார்த்ததுன்னைட்பணிவதென்றேபுபலபார்த்துநின்று
விண்பார்க்குஞ்சாதகமபோலுனனைப்பார்த்துநினமெய்யருடபா
லுண்பார்க்குஞானப்பெருககேகுற்றாலத்துறைபவனே (70)

சிறுகாலந்தாயர்முலைப்பான்மயக்கஞ்செகத்தறிவு
பெறுகாலமாதர்முலைமேனமயக்கமபெருநகிழமா
யிறுகாலமவஞ்சப்பிணியான்மயக்கமுன்னின்பதைநா
னுறுகாலமாவதெக்காலஙகுற்றாலத்துறைபவனே. (71)

ஆணவங்காட்டுவித்தாசையுங்காட்டுவித்தார்க்குமில்லா
நாணமுஙகாட்டியமாயையினுல்நெடுநாட்கருகதை
வீணவம்போக்கிவிட்டேனிரங்காய்கடலவெவ்விடத்தி
னூணலங்காரமிடற்றாய்குற்றாலத்துறைபவனே. (72)

கருநோயுங்கன்மப்பிறவியினேயுங்கருத்திற்கவலை
பொருநோயுமபூண்டசரீரததினேய்களுமபோககுநதெய்வத
திருநீருடையயநின சிதராநதிக்கரைசேர்நதவனறே
யொருநோயுமின்றித்தவிர்ந்தேன்குற்றாலத்துறைபவனே (73)

மறைப்பொருளானநின்சேவடிவாழத்திவடவருவித
துறைப்புனலாடிக்குழலவாய்மொழியுடன்சோதியுன்னை
யிறைப்பொழுதாகிலுமுள்ளே தியானித்திருக்கநெஞ்சி
லுறைப்பிலேயேயென்னசெய்வேன்குற்றாலத்துறைபவனே. (74)

செய்வதெல்லாங்குற்றமேயதனுற்செகத்தோர்களென்னை
வைவதெலலாங்கொடுந்துட்டனென்றேகட்டவல்வினையா
னைவதெலலாமுன்பொருட்டேசரண்புக்குநானினிமே
லுய்வதுநின்பொருட்டையாகுற்றாலத்துறைபவனே. (75)

தேயாமயக்கந்தெளிந்தோர்கண்முன்னந்தெளிவொன்றிலாப்
பேயாகநின்றுபிதற்றுவனேமனப்பேதமையான்
மாயாமலத்துக்குள்வீணேகிடந்துமயங்குமிநத
வோயாமயக்கந்தவிர்ப்பாய்குற்றாலத்துறைபவனே. (76)

எளியேனையாட்டுஞ்செயல்யாவுமுன்செயலென்றுநன்றாய்த்
தெளியேனெவ்வாறுதெளிவிப்பையோதிரையேவரையே
வளியேமறிபுனலேகனலேநெடுவானகமே
யொளியேபரந்தவெளியேகுற்றாலத்துறைபனே. (77)

அடக்கிக்கொண்டாலுள்ளடங்கிக்கொள்வேன்புவியாதிக்குநீ
நடத்திக்கொண்டாலுநடந்துகொள்வேனன்றிநானென்றெனை
தொடக்கிக்கொண்டாட்டமிடாதேசகலதொழிற்குமெண்சா [த்
ணுடக்கைக்கொண்டாட்டியசித்தாகுற்றாலத்துறைபவனே. (78)

எழுதிண்புவியுநொடிக்கேறுஞ்சிந்தையெருதுமங்கோர்
பொழுதென்னொருமடக்கேறிவராதுபுலன்கலப்பை
பழுதன்றிச்சேர்க்கவல்லேனல்லஞானபரமாநிலத்தி
லுழுதுண்டுவாழ்வதெவவாறேகுற்றாலத்துறைபவனே. (79)

பிறர்பொருளாசித்துப்பொய்பேசிச்சாணும்பிழைப்பதற்கா
யறமுதனான்குநிலைபிழைத்தேனடியார்ககடிமைத்
திறமிலனாகிலுநின்னடியார்திருக்கூட்டமலலா
லுறவினிவேறிலையாள்வாய்குற்றாலத்துறைபவனே. (80)

கொலைபாதகஞ்செய்யக்கற்றேனுன்பத்தர்குழாத்திற்செலல
மலையாதவுண்மைவரக்கற்றிலேனெனைவாழ்விப்பையோ
நிலையாரணங்களுக்கெட்டாதநாதநெடுவெளிக்கே
யுலையாதவானந்தக்கூத்தாகுற்றாலததுறைபவனே. (81)

ஆலமென்றாலுமமுதாமுனைக்கண்டவாடரவின்
கோலமுமாலையின்கோலமதாங்கொடியேன்வினையுங்
காலமுஞ்சாலநன்றாவதெனறேவரைகாலருவி
யோலமென்றார்க்குநதுறைசூழ்குற்றாலத்துறைபவனே. (82)

தொண்டென்றுனக்குப்புரியேன்மகளிர்சுரிகுழற்கே
வண்டென்றுமாலையென்றுஞ்சுழல்வேனைவாழவிப்பையோ
விண்டொன்றுமவெள்ளிப்பொருப்பாய்விருப்பும்வெறுப்புமில்லா
யுண்டென்றவர்மனத்துள்ளாய்குற்றாலத்துறைபவனே. (83)

வன்பெருங்காயமெடுத்தவர்யார்க்கும்வருவதின்பத்
துனபங்கள்கூடத்தொடர்ந்தல்லவோதொடர்ந்தாலுமித்தை
யென்பரஞ்சாட்டியிடையாமலொன்றுபட்டென்றைக்குநா
னுன்பரஞ்சாட்டியிருப்பேன்குற்றாலத்துறைபவனே. (84)

செகந்தோறுஞ்சென்றுசெனித்துழுதேன்சென்மந்தோறும்புல்
முகந்தோறுஞ்சென்றலுத்தேனிரங்காய்முனிவோர்மடவா [லர்
ரகந்தோறுமுணபலிக்காய்நடந்தாயயன்மாலென்றிங்கே
யுகந்தோறும்பேர்பெறறிருந்தாய்குற்றாலத்துறைபவனே. (85)

சென்னிறவேழமுகத்தெம்பிரானையுந்தெனனிலஞ்சிப்
பன்னிருகையனையுமபயந்தாய்வெறபரசன பெறற
கன்னியைக்கைவசமாக்கிக்கொண்டாயென்கருத்தையெல்லா
முன்னிருதாள்வசமாக்காய்குற்றாலத்துறைபவனே. (86)

வாலத்தனையுமொடுக்கிமிக்காய்வினைவாய்பிளந்து
காலக்கடும்புலிபாயுமுன்னேசெண்பகாடவிக்கே
யேலக்குழன்மடமாதொடுநீயுமிருந்ததிரு
வோலக்கங்காட்டியருளாய்குற்றாலத்துறைபவனே. (87)

பத்தியுமில்லைவயிராக்கியமில்லைபாரிலுண்மைச்
சத்தியமில்லைதவமாகிலுமில்லைசாந்தகுணப்
புத்தியுமில்லைகொடியேனிருந்ததுர்ப்புத்திக்குநீ
யொத்திருந்தெப்படியாள்வாய்குற்றாலத்துறைபவனே (88)

பழுக்குமுன்னேயுடல்நொய்க்குமுன்னேபதைத்தாவியெல்லா
நழுக்குமுன்னேயுட்கிநாறுமுன்னேநமன்பாசத்திலு
விழுக்குமுன்னேகண்கண்மூடுமுன்னேயிரதங்கடைவா
யொழுக்குமுன்னேவந்துதோன்றாய்குற்றாலத்துறைபவனே (89)

குருவாக்கியங்களகல்லேன்பத்தர்கூடுங்குழாத்திறசெல்லேன
றிருவாக்குமுண்மைதெளிந்திலேன்றெளிவேதுமின்றி
யெருவாக்கிடுமெலும்பானேனமுழுப்பித்தனென்னையுமோ
குருவாக்கிவிட்டெனையாள்வாய்குற்றாலத்துறைபவனே (90)

சுகதுக்கபாசத்திலேபிறவித்துவட்சிக்குநான்
முகமவைத்தமோசந்தவிர்ந்திடவேமுதலந்தமிலாப்
பகலுறறசுத்தவெளிக்கேயிருக்குநின்பாதபதம
யுகபதிமுற்றுந்தருவாய்குற்றாலத்துறைபவனே (91)

வினைப்பாதகர்க்குண்முழுப்பாவியாகியுமவெட்கமின்றி
யெனைப்பார்க்கயார்மிக்கரெனறெண்ணுவேனுனையென்று
நினைப்பாரிகழ்ச்சிமகிழ்ச்சிவந்தாலுநிலைமைவிடா [மோனறாய்
ருனைப்பாரஞ்சாட்டியிருப்பார்குற்றாலத்துறைபவனே (92)

எனதெனக்கென்றுதவிப்பதல்லாலுனையெண்ணுதற்கென்
மனது சற்றுகிலுமுண்டையுண்டோ வஞ்சனேனுமுன்னைத
தனதுபட்டாதிக்கபோலேதமிழ்க்கவிசாற்றுவது
முனதுகட்டாயததொழிலகாண்குற்றாலததுறைபவனே (93)

முடக்கிட்டுமாயப்பிறவிக்குள்ளேவிட்டுமூட்டியென்னைத
துடக்கிட்டுநானென்றுபேசசிட்டதென்வரைசூழநதுவட்டக
கடற்குட்டமிட்டபுவனிக்கெல்லாமொருகம்பததிலே
யுடக்கிட்டகூததிரதாரீகுற்றாலததுறைபவனே (94)

அன்பதுவைத்துனைப்போற்றுகிலேனடியார்க்கெளியா
யென்பதுசற்றுஙகருத்திலுன்னேனையாடகொளவையோ
முன்பதுமத்தயன்மாலானவர்முதலொனறுகொவை
வொன்பதுமானவொளியேகுற்றாலத்துறைபவனே (95)

மலைவாய்க்குவடன்னவார்முலையார்ககுமயலகொடுதேக
கிலைவாய்ப்படுபுனலபோலலைநதேனஞ்சனெனறருள்வா
யலைவாய்படாததெள்ளாரமுதேதுளையாதமுத்தே
யுலைவாய்ப்படாதசெமபொன்னேகுற்றாலததுறைபவனே (96)

தடுக்கும்பொழுதிலனுவளவேனுநதடுத்துக்கொள்வாய
கொடுக்குமபொழுதிலெல்லாஙகொடுபபாய்திருககூததுககுநீ
யெடுக்குஞ்சொரூபங்களாரறிவாரெனையாளபுலித்தோ
லுடுக்குஞசதாநநதயோகீகுற்றாலததுறைபவனே (97)

நின்னுச்சிரமமுனியாச்சிரமஙினதடியார்
பொன்னுச்சிரமமுமபூவாசசிரமமுமபூமடநதை
மன்னுச்சிரமமுமனனுவாகாணமனததாலுமவஞச
ருன்னுச்சிரமபததாயகுற்றாலததுறைபவனே (98)

திரையற்றஞானக்கடலுடையாயுனைச்சேர்ந்துசெனமக
கரையறறவாரிகடக்கினறவாறுகருணைசெய்வாய்
புரையற்றதொணடாமனததேயிருநதுபொருளவிளைககு
முரையற்றமோனவுணாவேகுற்றாலத்துறைபவனே (99)

நித்தர்கள்போறறுநின்னுவெணிமூலததினெலலைவந்து
முத்தமிழபாடக்கருணைசெயதாண்டனைமுற்றுமினிக
கொத்தடியேனுககுனபொறபதநதாகுழலவாய்மொழியா
ளுத்தமிபாகமுவந்தாய்குற்றாலத்துறைபவனே (100)

முற்றும்.

உ

# திருக்குற்றால ஊடல்.



மேலகரம் மகா கவி
திரிகூடராசப்பன் கவிராயர் இயற்றியது.

---

திருக்குற்றாலநாதசுவாமி கோயில் வெளியீடு.



T. S. சங்கரநாராயண பிள்ளை B. A., B. L.,
*மானேஜிங் தாமகர்த்தர்.*

A. C. ஷண்முகநயினா பிள்ளை B. A., B. L.,
(*அட்வகேட்*)
M. சுப்பிரமணியக் கரையாளர்,
(*மிட்டாதார்,*)
*தாமகாததாகள்.*

*ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், தென்காசி.*

---

1945

# திருக்குற்றால ஊடல்



## காப்பு.

பொருப்பிறை திருக்குற்றாலப் புனிதனும் புவனமீன்ற
வொருத்தியும புலவிதீர்ந்த வோலக்க மினிதுபாடத்
திருக்கைவேற கதிரெனற்றேங்குரு சேவகன முனனேதோன்றி
மருப்பெனப பிறையொன்றேந்தும் வழுவையான வழுவையானே

புவனமீன்ற ஒருத்தி - உலகத்தைத் தோற்றுவிக்கும் இறைவன் சக்தி. ஓலக்கம் - திருச்சமுகம், சந்நிதானம், காட்சி வழுவை + யான்- யானைமுகத்தவனாகிய விநாயகன் வழு + வையான்-குற்றம் வைக்கமாட்டான். வழுவையான் வழுவையானே - அணிநயங்காண்க. பிறை - வளைந்த. விநாயகன் இளம்பிறையணிந்திருப்பதாக விநாயகபுராணங் கூறும். மருப்பு - கொப்பு. (பொருப்பு + இறை - பொருப்பிறை)

## நூல்

குழல்வாய்மொழியம்மையார்:

தேரேறுஞ் சூரியாகள வலம்புரியும
வலமபுரியின செமபொற கோயில
ருரேறு மலாதூவித தாலத்தார்
பரவியகுற றாலத தாரே
யேரேறு கடறபிறந்த கருணைநகை
முத்துவெளுத திருப்பதல்லால
ஆரேறு மழுப்படையீர பவளமவெளுத
திருப்பதழ காகுந தானே 1

வலம்புரியும் - வலம் வரும். வலம்புரியின் செம்பொற்கோயில் - சங்கவடிவுடைய பொற்கோயில் (அடுக்கணி காண்க) தாலத்தார் - பூமியிலுள்ளவர்கள். பரவிய - போற்றிய. முத்து - பல். ஆர - கூர். பவளம- உதடு, பவளநிறமாயிருக்கவேண்டிய உதடு.

குற்றாலநாதர்:

காகமணுகாத திரிகூடமலை
யணங்கேயுன் கற்பின் சீர்த்தி
யோகமுறை பணிந்தேத்தி யுயர்மறை
யெலாமவெளுப்பா யுனக்கு மூத்த
மேகவண்ணன் கடல்வெளுபபா யாமிருக்கு
மலைமுழுதும வெளுப்பா யென்ற
னுகமெலாம் வெளுப்பானு லதரம்வெளுப்
பேறுதென் றுர்சொல் வாரே 2

மறை, பாற்கடல், கயிலைமலை மூன்றும் வெண்ணிறம். ஆகம் உடம்பு. ஆகம் வெளுப்பு - நீறுபூத்த மேனி.

குழல்வாய்மொழி:

ஆரிருந்தும தனித்திருநதும பிறைமவுலித்
திரிகூடத தணண லாரே
சீரியபொன் முலைககுறியும வளைககுறியும்
பெறறிருநத தேவ ரீரதா
மார்பிலொரு மைக்குறியும் வாடைமஞ்சட்
குறியுமின்று வரப்பெற றீரே
நேரிழைதன் பேருரையீர வஞசந்தானே
வுமது நெஞசந தானே 3

ஆரிருந்தும் - பொருந்தியிருந்தும். மவுலி - முடி. முலைக்குறியும் வளைக்குறியும் - உமை சிவபிரானைததழுவக்குழைந்த கதையிற் காண்க. (காஞ்சிப் புராணம்)

குற்றாலநாதர்:

நெஞ்சகத்தி னீயிருக்க நின்னையல்லா
லொருவரையு நினைய லாமோ
வுஞ்சலிட்ட குழைதடவுங் கயலவிழிப்பெண
குழன்மொழியே யொன்று கேளா
யஞ்சனத்தின் வண்ணமலல திருச்சாநது
வழிநதநிற மதுவேயன்றி
மஞ்சளைப்போ லிருநதநிறம போனனிதழித்
தாதவிழநத மாறறந தானே 4

அஞ்சனம் - மை இதழி - கொன்றை உஞ்சலிட்ட - ஆடுகின்ற.

குழல்வாய்மொழி

மாற்றுவெள்ளி மலையிலொரு பவளமலை
கொலுவிருககு மகிமை போல
வேற்றுவெள்ளை விடைமீதிற காட்சிதருங
குறறாலத் தெநதை யாரே
யாறறுவெள்ளை சடையிருக்கக கீறறுவெள்ளை
மதியிருகக வதிக மாகீா
நேற்றுவெள்ளை சாததினதை யினறுசிவப்
பானகண்ணு னிறுத்தி னீரே 5

மாற்று - பொன் வெள்ளியின் தரம், உயர்ந்தவெள்ளி. ஆறு-கங்கை. கீற்று வெள்ளைமதி - மூன்றாம்பிறை மதி. வெள்ளை சாத்தினது - ஏழாந் திருநாட்காட்சிகளில் ஒன்று.

குற்றாலநாதர்:

*நிறுத்திநாம பிரிந்ததில்லை நீபிரிந்து*
*பனிவரைக்கே நிற்கு நாளிற்*
*பொறுத்துநாம வடவாலின் கீழிருந்தோ*
*மதுதனக்குப பொறுப்பில லாமற்*
*சிறுத்துநாண மலர்தூவிக கறுத்துவந்த*
*சேவகனைச் சிவந்தபோது*
*குறித்துநாம பார்த்தவிழி சிவப்பனறோ*
*குழலமொழிபபூங கொடியன் னாளே* 6

பனிவரைக்கே நிற்குநாள்-இமயமலையரசன் புத்திரியாயிருந்தநாள். வடவாலின் கீழிருந்தது - தெட்சணாமூர்த்தியா யெழுந்தருளியிருந்தது. கறுத்து-கோபித்து. சேவகன்-மன்மதன். சிவத்தல்-கோபித்தல், கறுத்து, சிவந்து - முரண்தொடை.

குழல்வாய்மொழி:

*அன்றொளிற கோவணமும புலித்தோலும*
*வேடமுமா யாலின கீழே*
*பன்னாளும தூஙகினநீ ரென்றாலே*
*மணக்கோலப பதமபெறறீரே*
*யினறொளிற சடைகட்டிப பூமுடித்துத*
*தினஞ்சுகித்தா லிதுவோ செயவீர்*
*மின்றரு மினிச்சிலபோ வேணடாவோ*
*நீணடசஙக வீதி யாரே* 7

தூங்கின - யோக நித்திரையிலிருந்த.

குற்றாலநாதர்:

*வீதியாய் மரவுரிகிட் டினசனமபூண*
*டரியதவ வேடந் தாங்கி*
*ஆதிநாட் கான்றோரு மலைநதுதிரிந்*
*தானதுபோ யயோத்தி மேவி*
*மாதுசீதையைப்புணர்ந்து பாராண்ட*
*வுங்களண்ணன மார்க்கமெலலாங்*
*காதுகேட் டிருந்துமிது சொன்னதெனன*
*குழல்மொழிப்பூங் கயற்கண் மாதே* 8

கிட்டினசனம்-மான்தோல். தசரதராமன் கைகேயியின் சூழ்ச்சியால் நாடு துறந்து மரவுரியுடுத்தித்தவக்கோலங்கொண்டு காடுதோறுந்திரிந்து பின்பு அயோத்தி வந்ததும் லவன் குசன் என்ற இரு மக்களுடன் வாழ்ந்து அரசாண்ட கதையைக்குறிக்கும்.

குழல்வாய்மொழி:

மாதர்பாற் பலியிரந்தீர் பலியிட்ட
பைந்தாரா துகிலும் வளையுங் கொண்டீர்
சாதுவாய்த் தோலுடுப்பீர் அரையிலுள்ள
சோமனையுந் தலைமேற் கொள்வீர்
காதிலே பாம்பையிட்டீர் கழுத்திலே
நஞ்சையிட்டீர் கனபேய் கொண்டீர்
ஆதலா லுமைபோலும் பித்தருண்டோ
குற்றாலத் தண்ண லாரே 9

மாதர்.........கொண்டீர். தாருகா வனத்து ரிஷிகள் ஆணவங் கெடுத்த கதை. தோலுடுப்பீர் - புலி, யானையின் தோலையுரித்து அணிவீர். சோமன் - சந்திரன் கனபேய் கொண்டீர் - பூதநாதராயிருத்தல். அரையிலுள்ள சோமன்-அரையிற்கட்டியவேஷ்டி, அரை குறையாயுள்ள சந்திரன்.

குற்றாலநாதர்:

அண்ணலவரைத் திரிகூடப் பெண்ணமுதே
கேட்டியுங்க ளண்ணனை
கண்ணனமுதல் வரகுதின்று வாயாலெடுத்துப்
பண்டைக்கதை கேளாயோ
மண்ணிலொரு காற்சிலம்பைக் கையிலிட்டான்
கைவளையை வாயிலே யிட்டான்
பெண்ணொருத்திக் காயொருத்தி புடவையுரித்
தானவனே பித்தனாமே 10

திருமாலவதாரங்களின் விசேடங்களைக்குறிக்கின்றது சிலம்பு-மலை (கோவர்த்தனமலை) கையிலிடல் - குடையாகப்பிடித்தல் வளை - சங்கு பாஞ்சசன்னியம். கையிலுள்ள சங்கை ஊதினான் 4 ம்வரி இரணியாக்கன் ஒளித்துவைத்த பூமியை மீட்டக்கடலைக் கிழித்துப்போனான். கடல பூமிதேவியின் ஆடையென்று புராணங்கள் கூறும்.

குழல்வாய்மொழி:

பித்தனென்றும் பாராமற் பெண்கொடுத்தா
னவனோடு பிறந்த வாசிக்
கித்தனைபெண் சீருமிட்டான் கையம்பா
யுமக்கிருந்தா னெந்நாளும்
மைத்துனனைப் பாராட்டி எங்களண்ணன்
செய்தநன்றி மறந்ததாலே
சத்திபீ டத்துறைவீர் செய்தநன்றி
நீமறந்த சங்கை தானே 11

சங்கை-வழக்கம். கையம்பு - திரிபுரமெரித்தபோது திருமால் அம்பாயிருந்தது. சத்திபீடத்துறைவீர்-தரணிபீடத்திற்கெதிராய் வீற்றிருத்தல்.

குற்ருலநாதர்:

சங்கமெடுத்தே திரிந்தான் சக்கரா
யுதங்கொடுததோங் தலைநாட்கொண்ட
சிங்கவெறி தீர்த்தருளிச செய்யாளை
முகமபார்க்கச் செய்தோங் கண்டாய்
மங்கைகுழல வாய்மொழியே உங்களண்ணன்
செயதநன்றி மறந்ததாலே
யெஙகெலலாம பாலதிருடி யெஙகெலலா
மடிபடவு மேது வாச்சே 12

ஆயிரம் பூவுக்கு ஒன்று குறைய தன் கண்ணைப்பறித்துத் திருமால் அர்ச்சிக்கச்சிவபிரான் ஆழி கொடுத்தான். சிங்கவெறி நரசிம்ம அவதார மூர்க்கம் செய்யாள் - இலக்குமி. பால் திருடியது - யசோதை வீட்டில் வளரும்போது கிருஷ்ணன் செய்த லீலைகளில் ஒன்று.

குழல்வாய்மொழி

வாயச்சதிரி கூடமலைக் கிறையவரே
சொனனமொழி மறக்க வேண்டா
மேச்சுவந்து சுமநதசெஙக ளண்ணறகோ
வுமககோவென் றெணணிப் பாரீர்
காய்ச்சியபால கணண னுணடான் வேடனெச்சி
னீாகலநதிர் கருணை யாமா
லாய்ச்சியர்கை யாலடிபட் டானையரேநீர்
பேடிகையா லடிபட் டீரே 13

எச்சு-பித்தாவென்று சுந்தரர் பாடிய வரலாறு பெரியபுராணங்கூறும். வேடன் எச்சில் - கண்ணப்பநாயனா எசசில் நீரால் அபிடேகித்தது. பேடி கையாலடிபட்டது - அருச்சுனன் சிவபிரானை விற்பிரம்பாலடித் தது.

குற்ருலநாதர்:

அடிப்பதுவு மாய்ச்சியர்பால குடிப்பதுவு
மிசைநதானு மரச ஞை
முடித்தலையில முடியுமின்றிப் படிபுரநதா
னுமமுனது முன்வந் தானும்
படிக்கலமும் பசுநிறையும பயின்ருனுங்
குழலமொழிப்பூம பாவை கேளா
யிடைக்குலததிற் பிறந்தானே வெதுகுலத்திற்
பிறந்தானே விவன் கணடாயே 14

படிக்கலம் - பாத்திரம்.

குழல்வாய்மொழி:

கண்டிருந்துங் கன்னியர்க்கா வெனைப்பிரிந்த
மதநதானோ கலவிததேற
லுண்டிருந்த மதந்தானோ வெங்களண்ணான
குலதிலமறு வுரைதீ ரையா
பண்டிருந்த வுமதுகுல நான்சொன்னாற
பழுதாமோ பரமரே நீா
கொண்டிருந்துங் குலமபேசன் ஞாயமோ
குற்றாலக் கூதத னரே 15

தேறல் - தேன் மறு - குற்றம்.

குற்றாலநாதர்:

கூத்திருந்த பரமபெறவே கொதித்திருந்த
முனிவாகளுங கொலுச சேவிககக்
காத்திருநத தேவாகளுங காட்சிபெற
வேணடியுனைக கரநது போனோம
பூத்திருந்த திரிகூடப் பொருப்பிருநத
பசுஙகிளியே புலவிக் காக
வேத்திருந்த வார்த்தையெலலா மெதிாததிருநது
நீயுரைத்தா லெனசெய வோமே 16

வேத்திருந்த - வேற்றுமையாயிருந்த.

குழல்வாய்மொழி

என்மேலும பத்தியில்லாத் தேவருண்டோ
வெனைப்பிரிநது வீதிபோகத்
தென்மேவு திரிகூடச் செல்வரே
நீதியுண்டோ தேவரீர் மேல்
முன்மேவுங் குற்றமுண்டு திருவாக்குக்
கெதிர்வாக்கு மொழிந்த தாலே
தன்மேலுங் குற்றமுண்டு தமையனுர்
மேலுமுண்டோ தாழ்த்தி தானே 17

குற்றாலநாதர்:

தமையனென்றுந் தங்கையென்றும் பேதகமோ
குழன்மொழிப்பூங் சகத்தை யீன்ற
வுமையவளே தமையனுனக் கருமையென்று
னமக்குமவ னருமை யாமே
நமையுமோர் குறையுரைத்தாய் நாமவனைச்
சரசமா நவினறேங் கண்டா
யிமையவர்கள் வேண்டுதற்கா யித்தனையும்
பொறுத்தருள்வா யிமய மாதே 18

குழல்வாய்மொழி:

மாதேவா நீரொருவ ராடினது
கூத்தாச்சு வலியோர் செய்தால
தீதேதுஞ் செமியாதீர குற்றால
நஞ்சையுண்டு செமிப்பீ ரையா
போதாது நீரளக்கு மிருநாழிப்
படியெனக்குப் பொன்னும் பூணுஞ்
சூதான வகைமுழுதுஞ் சொன்னாலென்
றேபெருமை சொல்ல லாமோ 19

குற்றால நஞ்சு - ஆல கால விடம்.

குற்றாலநாதர்:

சொன்னமலை தனதாச்சுப் பொன்னுலகு
வெள்ளிமலை சொந்தமாயிற்
றின்னமொரு பொருளுமுண்டோ பெண்கள்
பேதமைக்குணந்தா னிதுபோலுண்டோ
வுன்னரிய விளைநிலமு நன்னகர
நவநிதியு முனக்கே யென்று
பன்னிகுழல் வாய்மொழியே பாலித்தோம
பட்டயமும் பாலித் தோமே 20

சொன்னமலை - சொர்ணமலை (மேருமலை). பொன்னுலகு - தேவலோகம் பன்னி - சொல்லி.

முற்றிற்று.

